# அமணலிங்கேசுவரர் திருக்கோயில்கள்



ஆசிரியர் :
தமிழகக் கோயிற் கலைச்செல்வர்
தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்
[கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு)]



விற்பனை உரிமை :
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, ஆள்வார்பேட்டை,
சென்னை-18.

கிடைக்குமிடம் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, ஆள்வார்பேட்டை,
சென்னை-18.

கிளைகள் :
79, பிரகாசம் சாலை (பிராடுவே), சென்னை-108.
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2 சேலம்-1.

முதற்பதிப்பு : ஏப்ரல் 1993

AMANALINKESUVARAR THIRUKOILKAL

அப்பர் அச்சகம், சென்னை-108.

# முன்னுரை

இந்து சமயக் கோயில்கள் சிவாலயம், விஷ்ணு வாலயம் எனப் பல திறப்படும். இத்தகைய கோயில்களைத் தமிழகத்தில் மட்டுமன்றி, இந்திய நாட்டில் எங்கும் பரக்கக் காணலாம்.

இவற்றுனின்றும் வேறுபட்ட கோயில்கள் பொள்ளாச்சி வட்டாரத்தில் உள்ளன. அவை அமணலிங்கேசுவரர் கோயில், அம்மணீசுவரர் கோயில், எனப் பலவாறாக அழைக்கப் பெறு கின்றன. இந்து சமயத்தில் மும்மூர்த்திகள் எனப் போற்றப் பெறும் சிவபெருமான், திருமால் மற்றும் பிரமன் ஆகிய மூவரையும் மூலவர்களாக ஒரு சேர வைத்து இந்தக் கோயில்களில் வணங்கப்பட்டு வருகின்றது. இது வேறு எங்கும் இல்லாத அரிய அமைப்பாகத் தெரிகிறது.

இத்தகைய கோயில்கள் பதின்மூன்றினைப் பொள்ளாச்சியில் T. V. S. நிறுவனத்தில் பணிபுரியும் திருவாளர்கள் பூபாலகிருஷ்ணன் மற்றும் இராமலிங்கம் என்பவர்கள் எனக்குத் தெரிவித் தனர். பெரியபட்டியில் உள்ள கோயிலைப் பற்றிப் பொள்ளாச்சி சுப்பிரமணிய சுவாமி கோயில் தலைமை அர்ச்சகர் திருமிகு C. V. பால சுப்பிரமணியக் குருக்கள் எனக்குத் தகவல் அளித்தார். இவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்தக் கோயில்களுக்கு எல்லாம் மூலக் கோயிலாக உள்ள திருமூர்த்திமலை அமணலிங்கேசுவரர் கோயில் அர்ச்சகர் திருமலி சேனாபதி குருக்களுக்கும்,

சம்பந்தப்பட்ட கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்களுக்கும், ஏனைய இறை அன்பர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

இந்த நூலினை வெளியிட நிதி உதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கும், இதனை நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் திருமிகு இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ. பி.லிப். அவர்களுக்கும் எனது இதய பூர்வமான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

தி. இராசமாணிக்கம்

# உள்ளுறை

பக்கம்



அமணலிங்கேசுவரர் கோயில் திருமூர்த்தி மலை



மும்மூர்த்திகள் ஊத்துக்குழி



தவக்கோலத்தில் சிவபெருமான் தேவம்பாடி வலசு



இரு அன்னையர் உடன் சிவபெருமான்
தேவம்பாடி வலசு



மூன்று இலிங்கங்கள் குரும்ப பாளையம்



ஒரு உடல் மூன்று தலைகள் கொண்ட மான் கரிப்பாடி

# அமணலிங்கேசுவரர் திருக்கோயில்கள்

---

## 1. தமிழகத்தில் சமணம்

பண்டை நாட்களில் சமண சமயம் தமிழகம் எங்கும் நிலைபெற்று இருந்ததோடு, செல்வாக்கும் பெற்று இருந்தது. கி. பி. 600 முதல் 630 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த முதலாம் மகேந்திர வர்மன் திருநாவுக்கரசு சுவாமிகளால் சைவத்தைத் தழுவுமுன் சமணனாக இருந்தவன். கூன் பாண்டியன், சுந்தரபாண்டியன் என அழைக்கப்பெற்ற பாண்டியப் பேரரசன் மாறவர்மன் அரிகேசரி (கி. பி. 640 முதல் 670 வரை செங்கோலோச்சியவன்) திருஞான சம்பந்த சுவாமிகளால் சைவத்தை ஏற்றுக் கொள்ளுமுன் சமண சமயத்தைப் பின்பற்றி வந்தான். இவை அக்காலத்தில் சமண சமயம் தமிழகத்தில் எவ்வாறு தழைத்து ஓங்கி செழித்து இருந்தது என்பதற்குச் சான்று பகர்கின்றன. மேலும் இதற்குத் தேவாரம், பெரியபுராணம், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவற்றில் இலக்கியச் சான்றுகள் பரவலாகக் காணப்படுகின்றன. இவை மட்டுமன்றிக், கல்வெட்டுச் சாசனங்களும், சமணர் தம் கோயில்களும், ஆங்காங்குக் காணப்பெறும் சமணத் தெய்வத் திருமேனிகளும் இதனை உறுதி செய்கின்றன.

காலஞ் செல்லச் செல்ல இந்து சமயம் சமண சமயக் கொள்கைகளான கொல்லாமை போன்ற

வற்றைத் தனதாக்கிக் கொண்டதுடன், அவர்தம் தெய்வத் திருமேனிகளை இந்துக்கள் தம் தெய்வங்களாக ஏற்றுப் போற்றி வணங்கி வரலாயினர். இன்றும் இவ்வழக்கம் தமிழகத்தில் பல இடங்களில் காணப்படுகிறது. உதாரணமாக இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த இளையாங்குடியில் உள்ள சிவன் கோயிலுக்கு வெளியே உள்ள சமணத் திருவுரு அமணசாமி என்ற பெயரால் இன்றும் அங்கு வசித்துவரும் ஆயிர வைசிய மஞ்சப்புத்தூர் செட்டியார்களால் வெள்ளிக்கிழமை தோறும் வணங்கப்பட்டு வருகிறது. இது அவர்களின் குலதெய்வம் என்று சொல்லப்படுகிறது.[1] தென்னாற்காடு மாவட்டம் திருக்கோயிலூர் வட்டம் சோழவாண்டிபுரத்தில் உள்ள மலைப் பாறையில் செதுக்கப்பட்டுள்ள பத்மாவதி அம்மனை இவ்வூர் மக்கள் காளியம்மன் எனக் கூறுகின்றனர்.[2] முந்தைய கோவை மாவட்டத்தைச் சார்ந்த கொள்ளேகால் வட்டத்தில் பஸ்தீபுரம் என்ற ஊரில் உள்ள ஒரு சமண வடிவம் அமணீசுவரர் என அழைக்கப்படுகிறது.[3] வ.உ.சி. மாவட்டத்தைச் சார்ந்த மலைப்பட்டி என்ற ஊரில் உள்ள மலைமீது பேச்சியம்மன் கோயில் உள்ளது. இங்குள்ள சமணத் திருமேனியை ஆரிய வைசிய நகரத்துச் செட்டியார்களும் ஏனையோரும் இன்றும் "பொய் சொல்லா மெய்யப்பன்" என்ற பெயரில் வழிபட்டு வருகின்றனர். கோவை மாவட்டத்தைச் சார்ந்த பொள்ளாச்சி நகரை அடுத்துள்ள வால்பாறை மலையில் நவமலை என்ற இடத்திற்குச் செல்லும் வழியில் முக்குடையுடன் வீற்றிருக்கும் சமணத் திருவுருவிற்கு இருபுறமும் இயக்கிகள் சாமரை வீசுவது போன்று அமைக்கப்பட்டுள்ளது.

"பொன்னு நன்மணியு முத்தும்
புனைந்த முக்குடை நிழற்ற
மின்னு பூம்பிண்டி நிழல்
வீற்றிருந்த வனை"

என்பது சூடாமணி நிகண்டு.[4] எனவே, முக்குடையுடன் கூடிய இவ்வடிவம் சமண தீர்த்தங்கரர் என்பதில் சற்றும் ஐயமில்லை. இருப்பினும் இது "ஆதானி அம்மன்" என்ற பெயரால் மக்களால் இன்றும் வணங்கப் பட்டு வருகிறது. "ஆதன்" என்பது சமணர்களின் தெய்வமான அருகக்கடவுளின் பெயர் எனச் சூடாமணி நிகண்டில் கூறப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது.[5]

"பிச்சக்குடை நிழற்சமணர்"[6] எனத் திருநல்லூர் திருத்தலம் பற்றித் தமது திருப்பதிகத்தில் குறிப்பிடும் திருஞானசம்பந்த சுவாமிகள் "ஆலும் மயிலின் பீலியமணர்"[7] என திருப்பிரமபுரத் திருத்தலத் திருப் பதிகத்தில் கூறியுள்ளார். மேலும் இவர் சமணர்களை "சமண்" என்றும் "அமண்" என்றும் பாடியுள்ளார். உதாரணமாகத் திருமாந்துறைத் திருத்தலத் திருப்பதி கத்தில் "நின்றுணுஞ் சமண்"[8] எனக் கூறிய நாயனார் திருப்பிரமபுரத் திருப்பதிகத்தில் "அமண் புத்தரும் அறிவொணா"[9] எனக் குறிப்பிட்டுள்ளார். இதினின்றும் சமண சமயத்தைத் தழுவியவர்கள் சமணர், அமணர், சமண், அமண் எனப் பலவாறாக அழைக்கப்பட்டமை தெரிய வருகிறது.

சமணர்கள் வாழ்ந்த ஊர்கள் அம்மணம்பாக்கம், அமணம்பாக்கம், அம்மணங்குறிச்சி, அமண்குடி எனப் பல பெயர்களால் வழங்கப்பட்டு வருகின்றன. உதாரணமாகச் செங்கல்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த ஸ்ரீபெரும்புதூர் வட்டத்தில் "அம்மணம்பாக்கம்" என்னும் இனாம் கிராமம் உள்ளது.[10] அதே மாவட்டத் தில் உள்ள மதுராந்தகம் மற்றும் செங்கல்பட்டு வட்டங் களில் "அம்மணம்பாக்கம்" என்ற ஊர்களும், திருவள்ளூர் வட்டத்தில் அமணம்பாக்கம் என்ற ஊரும் உள்ளன.[11] புதுக்கோட்டை மாவட்டத்தில் குளத்தூர் வட்டத்தில் "அம்மணங்குறிச்சி" என்ற ஊர் உள்ளது.[12] இவையேயன்றித் திருச்சி மாவட்டத்தைச்

சார்ந்த திருச்செந்துறையில் உள்ள சந்திரசேகரர் திருக்கோயில் உள்ள மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மனது பதினாறாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில் ''அமண்குடி'' எனக் குறிக்கப்பட்டுள்ளது.[13] இதே அரசனது இருபத்து மூன்றாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில் ''உறையூர் கூற்றத்து அமண்குடி'' எனப் பொறிக்கப்பட்டுள்ளது.[14] தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்று சோழ மண்டலத்து உய்யக் கொண்ட வள நாட்டைச் சார்ந்த வெண்ணாட்டில் அமண்குடி என்ற ஊர் இருந்ததாகக் கூறுகிறது.[15]

இதினின்றும் சமணர் தம் தெய்வத்திருமேனிகளும் அவர்கள் வாழ்ந்த ஊர்களும் ''சமண்'' என்ற பெயரால் அழைக்கப்படாது ''அமண்'' என்ற பெயராலேயே வழங்கப்பட்டு வந்தமை புலனாகிறது.

சமணர்தம் தெய்வ வடிவங்கள் இந்து சமயக் கடவுள் களாக இன்றும் தொழப்பட்டு வருவதற்கு அமண லிங்கேசுவரர் வழிபாடு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

# 2. மும்மூர்த்திகள் கோயில்கள்

வேதகாலத்தில் பிரஜாபதி என்று சிறப்பாகப் போற்றப் பெற்ற பிரமா படைப்புக் கடவுளாகவும், மும்மூர்த்திகளில் ஒருவனாகவும் கருதப்படுகிறான். இருப்பினும் இவன் தன் பெருமையை நாளடைவில் இழந்து விட்டான். இன்று இவனது வழிபாடு என்பது தனியாகக் கிடையாது. இதற்கான முக்கிய காரணம் புராண வரலாறுகள். ஒவ்வொரு புராண வரலாற்றிலும் குறிப்பிட்ட அசுரன் பொதுவாக பிரமாவை நோக்கிக் கடுந்தவம் செய்து பெருவரங்களைப் பெறுகிறான். அவ்வாறு தான் பெற்ற வரங்களின் வலிமை காரணமாக மக்களுக்கும் தேவர்களுக்கும் இடையூறுகள் பல உண்டாக்குகிறான். அதனால் பெருந்துன்பமுற்ற தேவர்கள் திருமாலையோ அல்லது சிவபெருமானையோ அடைகிறார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால், பிரமாதான் தேவர்களை அழைத்துச் செல்கிறான். திருமால் அல்லது சிவபெருமான் குறிப்பிட்ட அசுரனைக் கொன்று, அவர்களது துயரங்களைத் துடைக்கிறான். இதன் மூலம் திருமால் அல்லது சிவபெருமான் சிறப்பிக்கப் படுகிறான். இதனால் பிரமாவால் துன்பம் ஏற்படுவதாகவும், திருமால் அல்லது சிவபெருமான்தான் துன்பங்களைக் களைபவன் என்றும் மக்கள் எண்ணத் தொடங்கினர். இவ்வாறு பிரமா தன் சிறப்பை இழந்து ...ரன்.

தமிழகக் கோயில் கட்டிடக் கலையின் அடிப்படையாக விளங்குவன குடைவரைக் கோயில்கள். தமிழகத்தின் முதற் குடைவரைக் கோயில் பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மனால் தென்னாற்காடு மாவட்டத்தில் மண்டகப்பட்டு என்ற இடத்தில்

உருவாக்கப் பெற்றது. இது மும்மூர்த்திகளுக்சாக ஏற்பட்டதாம். ''பிரமீசுவர விஷ்ணு லக்ஷித குடைவரைக் கோயில்'' என இது அழைக்கப் பெறுகிறது. மாமல்ல புரத்தில் உள்ள திரிமூர்த்தி குடைவரைக் கோயிலின் வடபுறமாக உள்ள கருவறையில் பிரமா புடைச் சிற்பமாகக் காணப்படுகிறான். இவற்றைத் தவிர மும்மூர்த்திகள் கோயில்கள் என வணங்கப்பெறும் திருக் கோயில்களில் கூட பிரமாவிற்கு என்று தனியாக சந்நிதி கிடையாது. பெரியார் மாவட்டத்தைச் சார்ந்த கொடுமுடி மகுடேசுவரர் திருக்கோயில், திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த ஆயிரவேலி அயிலூர் திருவாலீசுவரர் திருக்கோயில் ஆகியவற்றை உதாரணங் களாகக் கூறலாம். இங்கெல்லாம் பிரமா தனியாக மரத்தடியில்தான் காணப்படுகிறான்.

இவற்றினின்றும் வேறுபட்டுப் பொள்ளாச்சி வட்டத்தில் ஒரு சில திருக்கோயில்களில் சிவபெருமான் திருமால் மற்றும் பிரமா ஆகிய மூவரும் ஒன்றாக மூலவர்களாக வைக்கப்பட்டு வணங்கப்பட்டு வருகின் றனர். இந்தத் திருக்கோயில்கள் எல்லாம் அமண லிங்கேசுவரர் கோயில், அம்மண ஈசுவரர் கோயில், அமணீசுவரர் கோயில் என்றெல்லாம் பலவாறாக அழைக்கப்பட்டு வருகின்றன. மேலும் உடுமலைப் பேட்டை வட்டத்தில் பெரியபட்டி என்ற ஊரைச் சார்ந்த முருகன் கோயிலில் மும்மூர்த்தி வடிவங்கள் உள்ளன. இந்தக் கோயில்களுக்கெல்லாம் மூலக் கோயில் உடுமலைப் பேட்டை வட்டத்தைச் சார்ந்த திருமூர்த்தி மலையில் உள்ள அமணலிங்கேசுவரர் திருக்கோயில் என்பதாகப் புலனாகிறது.

# 3. அமணலிங்கேசுவரர் திருக்கோயில் திருமூர்த்தி மலை

உடுமலைப் பேட்டையினின்றும் திருமூர்த்தி மலை இருபத்தொன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. எங்கு நோக்கினும் பச்சைக் கம்பளம் போர்த்தாற் போன்று பசுமையான மரஞ் செடிகளுடன் ஓங்கி உயர்ந்த மலைகள் கண்களுக்கும் மனத்திற்கும் இன்பம் தரும் காட்சிகளாக விளங்குகின்றன. மலையினின்றும் தெளிந்து நெளிந்து துள்ளிக் குதித்து ஓடிவரும் ஆறு இயற்கை அன்னை பெற்ற பெண் குழந்தை பருவம் அடைந்து, சகுந்தலை தன் எழில் நலம் பூரிப்புடன் விளங்க வனத்தில் மான்களுடன் ஓடி ஆடி விளையாடு வதைப் போன்று தோற்றம் அளிக்கிறது. இவ்வாறு இயற்கை அன்னை தன் அழகையெல்லாம் வாரி வாரி வழங்கியிருக்கும் மலையின் அடிவாரத்தில் ஆற்றின் கரையில் கோயில் அமைந்துள்ளது.

ஒரு குன்றினை ஒட்டி இரு சுவர்கள் மட்டும் கொண்ட கருவறைக்கு முன் நீண்ட முன் மண்டபம் காணப்படுகிறது. இதனை அடுத்துப் பிள்ளையாருக்கும், முருகனுக்கும் இரு கோயில்கள் சமீபத்தில் கட்டப் பட்டுள்ளன. இந்தத் திருக்கோயில்களுக்கு மேல் புறமாக நவக்கிரக சந்நிதி அமைந்துள்ளது. கோயில் களுக்குச் சற்றுத் தள்ளி உள்ள கொடி மரத்தைச் சுற்றி யுள்ள எட்டுத் தூண்களில் புடைச் சிற்பங்கள் உருவாக்கப் பட்டுள்ளன; குன்றின் மேல் புறமாக சப்தகன்னியர் திருவுருவங்கள் காணப்படுகின்றன;

கருவறையில் எந்த இறை வடிவமும் இல்லை. குன்றின் மேல் பகுதியில் மூன்று வடிவங்கள் புடைச்

சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளன. இவை நேராகவோ அல்லது தலைகீழாகவோ இல்லாது பக்கவாட்டில் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் குறிப்பிட்ட குன்று பெரும் வெள்ளத்தால் உருண்டிருக்க வேண்டும். நடுவில் உள்ள வடிவம் பத்மாசனத்தில் அமர்ந்து தன் இரு கைகளையும் ஒன்றின் மீது ஒன்றாக மடிமீது அதாவது யோக முத்திரையில் வைத்துள்ளது. இதன் தலைக்கு மேல் சமண தீர்த்தங்காரர் திருவுருவிற்குமேல் அமைந்து இருப்பது போன்று முக்குடை உருவாக்கப் பெற்றுள்ளது. இதற்கு இருபுறமும் உள்ள இரு வடிவங்களும் நின்ற நிலையில் சாமரை வீசுவது போன்று உள்ளன. எல்லா வடிவங்களுக்கும் இரு கைகள் தாம் உள்ளனவேயன்றி, இந்து தெய்வங்களுக்குப் பொதுவாக உள்ளது போன்று நான்கு கைகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்த வடிவங்களின் கைகளில் எந்தப் படைக்கலங்களும் இல்லை. நடுவில் உள்ள வடிவத்தின் தலையில் சடாமகுடம் போன்ற அமைப்பு இல்லை. இங்குள்ள கல்வெட்டினின்றும் இந்தத் திருமேனியின் பெயர் அமணசாமி என்றும், இந்த ஊரின் பெயர் அமண சமுத்திரம் என்றும் தெரிய வருகிறது.[16] இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டால், நடுவில் உள்ள வடிவம் சமண தீர்த்தங்கரர் என்பதில் சற்றும் ஐயமில்லை.[17]

தற்காலத்தில் இந்த மலை திருமூர்த்தி மலை என அழைக்கப் பெறுகிறது. திருமூர்த்தி என்பது சமணர்களின் தெய்வமான அருகக்கடவுளின் பெயர். இதைத் திரிமூர்த்தி என்பதாகக் கொண்டு பிரமா, திருமால், சிவபெருமான் ஆகியோரைக் குறிப்பதாகக் கொள்ளப் படுகிறது" என்பர் திருமிகு மயிலை சீனிவேங்கடசாமி.[18] இவ்வாறு இந்த மூன்று வடிவங்களும் மும்மூர்த்திகள் என இன்றுவரை போற்றி வணங்கப்பட்டு வருகின்றன.

இறைவனை வணங்க மட்டுமன்றி, இயற்கை அழகை அள்ளிப் பருகித் தம் மனக்கவலைகளை எல்லாம் மறந்து இன்பமாகப் பொழுதினைப் போக்கச் சுற்றுலாப் பயணிகள் நாடோறும் நூற்றுக்கணக்கில் வந்து செல்கின்றனர். மாதாந்தர அமாவாசை, மகா சிவராத்திரி போன்ற பண்டிகை நாட்களிலும், சனி, ஞாயிறு ஆகிய விடுமுறை நாட்களிலும் இங்கு மக்கள் ஆயிரக்கணக்கில் வந்து இறைவனை வழிபட்டு, அன்றைய நாளினை மகிழ்ச்சியுடன் கழிக்கின்றனர்.

இங்குள்ள குன்றின் மேல் உருவாக்கப்பெற்ற புடைச் சிற்பங்களின் அடிப்படையில் பொள்ளாச்சியைச் சுற்றிப் பல கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன.



# 4. அமணலிங்கேசுவரர், அம்மணீசுவரர், அமணீசுவரர்- பெயர்க் காரணங்கள்

இங்குள்ள கல்வெட்டில் இந்தத் திருமேனியின் பெயர் அமணசாமி என்று கூறப்பட்டுள்ளது. பிரமா, திருமால், சிவபெருமான் என்ற மும்மூர்த்திகளில் சிவபெருமான் நடுவில் அமைக்கப்பட்டுள்ளது அவனுக்குத் தான் சிறப்பிடம் என்பதாகிறது. சிவபெருமான் பொதுவாக இலிங்க வடிவில்தான் வணங்கப்பட்டு வருகிறான். மேலும் பல சிவதலங்களில் இறைவனது பெயர் ஈசுவரன் என்றுதான் முடிகிறது. வீரட்டானேசுவரர் (திருக்கோயிலூர்), பாடலீசுவரர் (திருப்பாதிரிப்புலியூர்), அருணாசலேசுவரர் (திருவண்ணாமலை), முண்டீசுவரர் (திருமுண்டீச்சுரம்), நாவலீசுவரர் (திருநாவலூர்), சொர்ணபுரீசுவரர் (திருச்செம்பொன்பள்ளி), வலம்புரிநாதேசுவரர் (திருவலம்புரம்) போன்ற பெயர்களை உதாரணங்களாகக் கூறலாம். அமண் + இலிங்கம் + ஈசுவரன் என்ற மூன்று சேர்ந்து அமணலிங்கேசுவரர் என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. சமணத் திருமேனிகளை அமணசாமி, அமணீசுவரர் என வணங்கப்பட்டு வருவதையும், சமணர் வாழ்ந்த இடங்கள் அம்மணப்பாக்கம், அமணப்பாக்கம், அம்மணங்குறிச்சி, அமண்குடி என வழங்கி வருவதையும், இந்தக் கோயிலும், இதன் அடிப்படையில் அமையப் பெற்ற கோயில்களும் அமணலிங்கேசுவரர் கோயில், அம்மண ஈசுவரர் கோயில், அமணீசுவரர் கோயில் என்று அழைக்கப்பட்டு வருவதுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இவை யாவற்றிற்கும் அடிப்படை ஒன்றே என்பது தெளிவாகிறது.

தற்காலத்தில் இப்பெயருக்குத் தத்துவரீதியாகச் சில பொருள்கள் சொல்லப்படுகின்றன. அவையாவன:—

மண் என்றால் உலகம் அதாவது விருப்பு, வெறுப்புகளைச் சுட்டிக் காட்டுகிறது. 'அ' என்ற சொல் எதிர்மறைப் பொருளைத் தருவதால், அமணீசுவரர் என்றால் விருப்பு, வெறுப்பு அற்றவன் என்பதாகிறது. "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்பது திருவள்ளுவர் வாக்காம். மேலும் மணம் என்றால் வாசனை அதாவது வாசனை என்பது (ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்களையும் குறிக்கும். எனவே அமணலிங்கேசுவரர் என்றால் மும்மலங்கள் அற்றவன் என்று பொருள் கொள்ளப்படுகிறது. இப்பொருள்கள் எல்லாம் நடுவில் உள்ள வடிவங்களின் தவக்கோலத்திற்கு ஏற்ப உள்ளன. இதுவன்றிக் கஞ்சம்பட்டி, கூளநாயக்கன்பட்டி ஆகிய இடங்களில் உள்ள அமணீசுவரர் கோயில்கள் மலையாண்டிசாமி கோயில்கள் எனவும், பொள்ளாச்சி சிங்கநல்லூரை அடுத்துள்ள அமணேசுவரர் கோயில் சித்தாண்டீசுவரர் கோயில் எனவும் வழங்கப்பெறுவது இறைவனது தவக்கோலத்தை உணர்த்துவனவாக உள்ளன.

ஒரு சில இடங்களில் அம்மணீசுவரர் கோயில் எனவும் சொல்லப்படுகிறது. அநுசூயாவிடம் மும்மூர்த்திகள் பிச்சை கேட்ட புராண வரலாறுடன் இந்தப் பெயர் தொடர்புபடுத்திப் பேசப்படுகிறது. அநுசூயாவிடம் மும்மூர்த்திகள் நிர்வாணமாகப் பிச்சையிட வேண்டுமென்று கேட்டபடியால் (உலக வழக்கில் நிர்வாணம் என்பது 'அம்மணம்' என்று சொல்லப்படுகிறது) இறைவனுக்கு அம்மண ஈசுவரர் என்ற பெயர் ஏற்பட்டு, அது நாளடைவில் அம்மணீசுவரர் என வழங்கப்பட்டு வருவதாகச் சொல்லப்படுகிறது.

சமண முனிவர்கள் நிர்வாணமாக அதாவது அம்மணமாகத் திரிந்தனர். இதைத் திருஞான சம்பந்த சுவாமிகள் தம் திருப்பதிகங்களில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளனர். "உடை துறந்தவர்களும்" எனத் திருமயேந்திர பள்ளித் திருத்தலத் திருப்பதிகத்திலும்[19] "உடுக்கை யின்றியே" எனக் காவிரிப் பூம்பட்டினத்துத் திருப் பல்லவனீச்சரத் திருப்பதிகத்திலும்[20], "உடையிலார்" எனத் திருப்பிரமபுரத் திருத்தலத் திருப்பதிகத்திலும்[21] சொல்லியவற்றை உதாரணங்களாகக் கூறலாம். எனவே சமணர் வாழ்ந்த ஊர்கள் அம்மணம்பாக்கம், அம்மணங்குறிச்சி என வழங்கப்பட்டதைப் போன்று, அவர்தம் தெய்வ வடிவங்கள் அம்மணசாமி என அழைக்கப்பட்டிருக்க வேண்டும். அது நாளடைவில் அம்மணீசுவரர், அமணீசுவரர் என மருவி இருக்கலாம்.

---

# 5. அமணலிங்கேசுவரர் திருக்கோயில்கள்

திருமூர்த்தி மலை நீங்கலாக இதுவரை தெரிய வந்துள்ள கோயில்கள் உள்ள இடங்கள் :—

1. உனத்துக்குளி
2. கஞ்சம்பட்டி
3. மஞ்சநாயக்கனூர்
4. கூளநாயக்கன்பட்டி
5. தேவம்பாடிவலசு
6. குரும்பபாளையம்
7. கரப்பாடி
8. சித்தாண்டீசுவரர் கோயில்
9. தேவனாம்பாளையம்
10. ஜலத்தூர்
11. தெ. கோட்டாம்பட்டி
12. கருப்பம்பாளையம்
13. பணிக்கம்பட்டி
14. பெரியபட்டி

இத்தகைய கோயில்கள் இன்னமும் இருக்கலாம்.

மேலே கண்ட கோயில்களை ஒவ்வொன்றாக விரிவாகப் பார்ப்போமாக :—

# 1. ஊத்துக்குளி

பொள்ளாச்சி—மீனாட்சிபுரம் சாலையில் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஊத்துக்குளிக்குச் செல்லும் வழியில அமணேசுவரர் கோயில் அமைந்துள்ளது. கோயிலினின்றும் ஊத்துக்குளி ஏறத்தாழ ஒரு கிலோ மீட்டர் தூரத்தில இருக்கிறது. இது ஊத்துக்குளி ஜமீன் எல்லைக்கு உட்பட்டது.

கிழக்கு நோக்கிக் கட்டப்பட்டுள்ள இந்தக் கோயில் சிறிய அளவிலானது. இது கருவறை, முன் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. அதிட்டானம் முதல் கிரீவம் வரையில் கருங்கல்லாலும், கிரீவமும் அதற்கு மேலும் செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளன. சந்நிதிக்கு முன் நந்தி காணப்பட, கீழ்ப்புறச் சுவரை ஒட்டி, வீரர்கள் மற்றும் அவர்தம் மனைவியர்கள் ஆகியோரைப் புடைச் சிற்பங்களாக உருவாக்கப்பெற்ற பலகைக் கற்கள் காணப்படுகின்றன.

கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் தென்புறம் தட்சிணாமூர்த்தியும் நடன கணபதியும், மேல் புறம இலிங்கோற்பவரும், வடபுறம் பிரமா மற்றும் சண்டிகா வும் உள்ளனர். தன் ஊர்தியான பெருச்சாளிமீது நடனம் புரியும் பிள்ளையாரின் நான்கு கைகளில் முன் வலக்கையில் தந்தமும், முன் இடக்கையில் போதகமும் இருக்க, பின் வலக்கையில் அங்குசமும், பின் இடக் கையில் பாசமும் அமைக்கப்பட்டுள்ளன. எருமையின் தலைமீது நிற்கும் சண்டிகாவின் முன் வலக்கையில் சூலம், முன் இடக்கையில் கபாலம் காணப்பட, பின் வலக்கையில் பாம்பும், பின் இடக்கையில் உடுக்கையும் உருவாக்கப் பெற்றுள்ளன.

பிரமா, திருமால், சிவபெருமான் ஆகிய மும் மூர்த்திகள் தனித்தனியாக மூலவர்களாகக் கருவறையில் அமைக்கப்பட்டுள்ளனர். பத்மாசனத்தில் நடுவில் உட்கார்ந்து இருக்கும் சிவபெருமானின் முன் இரு கைகள் யோக முத்திரையில் காணப்பட, பின் வலக்கையில் சூலமும் பின் இடக்கையில் மானும் உள்ளன. இவனது தலையில் சடா மண்டலம் அமைக்கப்பட்டுள்ளது.

சிவபெருமானுக்கு வலப்புறமாக நின்ற நிலையில் திருமால் உள்ளான். இவனது தலையில் கிரீடம் காணப்பட, முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை ஊரு முத்திரையிலும், பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் சங்கும் உருவாக்கப் பட்டுள்ளன.

சிவபெருமானுக்கு இடப்புறமாக பிரமா நின்ற நிலையில் காணப்படுகிறான். இவனுக்குக் கிரீடத்துடன் ஒரு தலை மட்டும் அமைக்கப்பட்டுள்ளது. இவனது நான்கு கைகளில் முன் வலக்கை தொங்கிய நிலையில் கமண்டலத்தைப் பிடித்து இருக்க, முன் இடக்கையில் ஓலைச் சுவடியும், பின் வலக்கையில் அக்க மாலையும் உள்ளன. பின் இடக்கையில் உள்ளது சரியாகத் தெரிய வில்லை.

சிவபெருமானுக்கு முன்னால் அவனது ஊர்தியான காளை உள்ளது.

ஏனைய அமணேசுவரர் கோயில்களில் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் எந்த கோஷ்ட வடிவமும் இல்லை. இங்கு மட்டும் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளில் பிள்ளையார், தட்சிணா மூர்த்தி போன்ற இறைத் திருவுருவங்கள் காணப்படுவது இதன் தனிச் சிறப்பாகும். கோஷ்டி தெய்வங்களில் இங்கு காணப்படும் சிறப்பான வடிவம் சண்டிகா ஆகும்.

மும்மூர்த்திகளின் திருவுருவங்களை மூலவர்களாகக் கொண்ட மற்றைய அமணேசுவரர் கோயில்களில் (பெரியபட்டி முருகன் கோயில் நீங்கலாக), சிவபெருமானுக்குப் பிரமா வலப்புறமாகவும், திருமால் இடப்புறமாகவும் இருக்க, இங்கு மட்டும் பிரமா சிவபெருமானுக்கு இடப்புறமாகவும், திருமால் வலப்புறமாகவும் அமைக்கப்பட்டுள்ளது இந்தக் கோயிலில் காணப்படும் வேறுபாடாகும்.

இந்தக் கோயிலில் பூசை ஏதும் நடைபெறுவதில்லை.

---

## 2. கஞ்சம்பட்டி

பொள்ளாச்சியினின்றும் கஞ்சம்பட்டி பன்னிரண்டு கிலோ மீட்டர்த் தொலைவில் உள்ளது. நகரப் பேருந்து வசதி உள்ளது: ஊரை அடுத்துள்ள மலைமீது இருந்த கோயில் புதுப்பிக்கப்பட்டு, சமீப காலத்தில் திருக்குடமுழுக்கு விழா நடைபெற்றது. சிறிய அளவிலான இந்தக் கோயில் செஞ்சுவாடி ஜமீன் எல்லைக்கு உட்பட்டது. உலக வழக்கில் இது மலையாண்டிசாமி கோயில் என அழைக்கப்பெறுகிறது. மலையாண்டி என்றால் மலை மீது உள்ள ஆண்டி எனப் பொருள் கொள்ளலாம். இது இங்குள்ள சிவபெருமானின் தவக் கோலத்தை வலியுறுத்துவதாக உள்ளது.

கருவறை மற்றும் முன் மண்டபம் ஆகியவற்றைக் கொண்ட இந்தக் கோயிலின் கருவறையின்மேல் சிறிய விமானம் கட்டப்பட்டுள்ளது. கிழக்கு நோக்கி இந்தக் கோயில் உள்ளது.

மூலவர்களாக மும்மூர்த்திகள் தனித்தனியாகக் காணப்படுகின்றனர். சிவபெருமான் நடுவில் பத்மாசனத்தில் உட்கார்ந்து உள்ளான். இவனது பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் காணப்பட, முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை வரத முத்திரையிலும் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைய அமணேசுவரர் கோயில்களில் சிவபெருமானது முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க, இங்கு மட்டும் அபய மற்றும் வரத முத்திரைகளில் காணப் படுவது முக்கிய வேறுபாடாகும். இவனது தலையை, ஊத்துக்குளியில் உள்ளது போன்று, சடா மண்டலம் அலங்கரிக்கிறது.

சிவபெருமானுக்கு இடப்புறம் நின்ற நிலையில் திருமால் உள்ளான். இவனது நான்கு கைகளில் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக் கை வரத முத்திரையிலும் அமைந்து இருக்க, பின் வலக் கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் காணப் படுகின்றன.

சிவபெருமானுக்கு வலப்புறம் நின்ற நிலையில் உள்ள பிரமனுக்கு உருவாக்கப்பெற்ற ஒரு தலையை மகுடம் அலங்கரிக்கிறது. இவனது பின் வலக் கையில் கமண்டலமும் பின் இடக் கையில் அக்கமாலையும், முன் இடக் கையில் ஓலைச் சுவடியும் உள்ளன.

இங்கு நாடோறும் பூசை நடைபெற்று வருகிறது

# 3. மஞ்சநாயக்கனூர்

மஞ்சநாயக்கனூர் என்ற ஊர் பொள்ளாச்சியினின்றும் பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. (நகரப்பேருந்து வசதி உள்ளது.) தொண்டாமுத்தூர் ஜமீனுக்கு உட்பட்ட இந்த ஊரினின்றும் ஒரு கிலோ மீட்டர் தள்ளிப் பாலாறு அருகே கிழக்கு நோக்கிக் கோயில் கட்டப் பெற்றுள்ளது. இந்தக் கோயில் நிலப் பத்தீசுவரர் கோயில் என்று மக்களால் வழங்கப் பெற்று வருகிறது.

கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், திருமதி ல ஆகியவற்றைக் கொண்டது. உயர்ந்த விமானத்துடன் கூடிய இந்தக் கோயில் அமணேசுவரர் கோயில்களில் எல்லாம் மிகப் பெரியது என்னலாம். கருவறைக்கு வலப்புறம் பிள்ளையார் சந்நிதி இருக்க, இடப்புறம நவக்கிரக சந்நிதி உள்ளது. நவக்கிரக சநநிதியில சப்த கன்னியாகளும், நான்கு புடைச் சிற்பங்களும் காணப்படுகின்றன. கோயிலுக்கு வெளியே அரச மரத்தடியில் பிரமனின் உடைந்த சிலை ஒன்றும் நான்கு புடைச் சிற்பங்களும் உள்ளன.

கருவறையில் மும்மூர்த்தி வடிவங்கள் தனித் தனியாக அமைக்கப்பெற்றுள்ளன: நடுவில் பத்மாசனத்தில் அமர்ந்து இருக்கும் சிவபெருமானது முன் இரு கைகள் ஏனைய இடங்கள் போன்று ஒன்றின் மேல் ஒன்று அதாவது யோக முத்திரையில் இல்லாது விரல்கள் மட்டும் தொட்டபடி உள்ளன; இவனது பின் வலக் கையில் சக்தியும், பின் இடக் கையில் மானும் அமைக்கப் பட்டுள்ளன.

சிவபெருமானுக்கு இடப்புறம் நின்ற திருக்கோலத்தில் உள்ள திருமாலின் நான்கு கைகளில் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக் கை ஊரு முத்திரையிலும் இருக்க, பின் வலக் கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் உள்ளனூ

சிவபெருமானுக்கு வலப்புறம் நின்ற நிலையில் இருக்கும் பிரமனுக்கு மகுடத்துடன் கூடிய நான்கு தலைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைய கோயில்களில் (பெரியபட்டி நீங்கலாக) பிரமனுக்கு ஒரு தலை மட்டும் இருக்க, இங்கு மட்டும் பிரமன் நான்கு தலைகளுடன் உள்ளது இதன் தனிச் சிறப்பாகும். இவனது முன் வலக் கை அபய முத்திரையிலும், முன் இடக் கை கமண்டலத்துடனும் இருக்க, பின் வலக் கையில் யோக தண்டம் உருவாக்கப்பெற்ற தடியும், பின் இடக் கையில் வெள்ளிக் கரண்டியும் அமைக்கப்பட்டுள்ளன. கூளநாயக்கன் பட்டியில் இருப்பது போன்று இங்கு இவனது பின் இடக் கையில் வெள்ளிக் கரண்டி இருப்பினும், பின் வலக் கையில் யோகதண்டம் உருவாக்கப்பெற்ற தடி இருப்பது வேறு எங்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். மேலும் யோகதண்டம் உருவாக்கப் பெற்ற தடியினைக் கையில் அமைக்க ஆகமங்களில் விதி இருப்பதாகத் தெரியவில்லை.

இங்கு தினசரி பூசை நடைபெற்று வருகிறது.



# 3. மஞ்சநாயக்கனூர்

மஞ்சநாயக்கனூர் என்ற ஊர் பொள்ளாச்சி யினின்றும் பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. (நகரப்பேருந்து வசதி உள்ளது.) தொண்டா முத்தூர் ஜமீனுக்கு உட்பட்ட இந்த ஊரினின்றும் ஒரு கிலோ மீட்டர் தள்ளிப் பாலாறு அருகே கிழக்கு நோக்கிக் கோயில் கட்டப் பெற்றுள்ளது. இந்தக் கோயில் நிலப் பத்திசுவரர் கோயில் என்று மக்களால் வழங்கப் பெற்று வருகிறது.

கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், திருமதில் ஆகியவற்றைக் கொண்டது. உயர்ந்த விமானத்துடன் கூடிய இந்தக் கோயில் அமணேசுவரர் கோயில்களில் எல்லாம் மிகப் பெரியது என்னலாம். கருவறைக்கு வலப்புறம் பிள்ளையார் சந்நிதி இருக்க, இடபபுறம நவக்கிரக சந்நிதி உள்ளது. நவக்கிரக சநநிதியில சப்த கன்னியாகளும், நான்கு புடைச் சிற்பங்களும் காணப்படுகின்றன. கோயிலுக்கு வெளியே அரச மரத்தடியில் பிரமனின் உடைந்த சிலை ஒன்றும் நான்கு புடைச் சிற்பங்களும் உள்ளன.

கருவறையில் மும்மூர்த்தி வடிவங்கள் தனித் தனியாக அமைக்கப்பெற்றுள்ளன. நடுவில் பத்மாசனத் தில் அமர்ந்து இருக்கும் சிவபெருமானது முன் இரு கைகள் ஏனைய இடங்கள் போன்று ஒன்றின் மேல் ஒன்று அதாவது யோக முத்திரையில் இல்லாது விரல்கள் மட்டும் தொட்டபடி உள்ளன; இவனது பின் வலக் கையில் சக்தியும், பின் இடக் கையில் மானும் அமைக்கப் பட்டுள்ளன.

சிவபெருமானுக்கு இடப்புறம் நின்ற திருக் கோலத்தில் உள்ள திருமாலின் நான்கு கைகளில் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக் கை ஊரு முத்திரையிலும் இருக்க, பின் வலக் கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் உள்ளன.

சிவபெருமானுக்கு வலப்புறம் நின்ற நிலையில் இருக்கும் பிரமனுக்கு மகுடத்துடன் கூடிய நான்கு தலைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைய கோயில்களில் (பேரியபட்டி நீங்கலாக) பிரமனுக்கு ஒரு தலை மட்டும் இருக்க, இங்கு மட்டும் பிரமன் நான்கு தலைகளுடன் உள்ளது இதன் தனிச் சிறப்பாகும். இவனது முன் வலக் கை அபய முத்திரையிலும், முன் இடக் கை கமண்டலத்துடனும் இருக்க, பின் வலக் கையில் யோக தண்டம் உருவாக்கப்பெற்ற தடியும், பின் இடக் கையில் வேள்விக் கரண்டியும் அமைக்கப்பட்டுள்ளன. கூளநாயக்கன் பட்டியில் இருப்பது போன்று இங்கு, இவனது பின் இடக் கையில் வேள்விக் கரண்டி இருப்பினும், பின் வலக் கையில் யோகதண்டம் உருவாக்கப்பெற்ற தடி இருப்பது வேறு எங்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். மேலும் யோகதண்டம் உருவாக்கப் பெற்ற தடியினைக் கையில் அமைக்க ஆகமங்களில் விதி இருப்பதாகத் தெரியவில்லை.

இங்கு தினசரி பூசை நடைபெற்று வருகிறது.



# 4. கூளநாயக்கன்பட்டி

பொள்ளாச்சியினின்றும் பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் கூளநாயக்கன்பட்டி என்ற ஊர் உள்ளது. நகரப் பேருந்து வசதி உள்ளது. ஊரினின்றும் சற்றுத் தள்ளிக் கோமங்கலம் ரயில் நிலையத்திற்கு அருகில் கோயில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இது செஞ்சுவாடி ஜமீன் எல்லைக்குட்பட்டது. இதை மலையாண்டி சாமி கோயில் என்று மக்கள் அழைக்கின்றனர். இது சிறிய அளவிலானது.

கோயில் கருவறை மற்றும் முன்மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. முன் மண்டபத்தில் பிள்ளையார் இருக்க, கோயிலுக்கு முன்னால் நந்தி காணப்படுகிறது.

கருவறையின் உள்ளே ஒரே கல்லில் புடைச் சிற்பங்களாக உருவாக்கப்பெற்ற மும்மூர்த்தி வடிவங்கள் மூலவர்களாக உள்ளனர். நடுவில் சிவபெருமான் பத்மாசனத்தில் உட்கார்ந்து உள்ளான். இவனது முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க, பின் வலக் கையில் மழுவும், பின் இடக் கையில் மானும் காணப்படுகின்றன. இவனது தலையில், ஊத்துக்குளி, கஞ்சம்பட்டி போலன்றி, சடாமகுடம் உருவாக்கப் பெற்றுள்ளது.

சிவபெருமானுக்கு இடப்புறமாக நின்ற திருக் கோலத்தில் உள்ள திருமாலின் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக் கை ஊரு முத்திரையிலும் உள்ளன. இவனது பின் வலக் கையில் சக்கரமும் பின் இடக் கையில் சங்கும் அமைக்கப்பட்டுள்ளன.

சிவபெருமானுக்கு வலப்புறம் நின்ற நிலையில் பிரமன் காணப்படுகிறான். இவனுக்கு உருவாக்கப்

பெற்ற ஒரு தலையை மகுடம் அலங்கரிக்கிறது: முன் வலக் கை அபய முத்திரையிலும், முன் இடக் கை தொங்கிய நிலையில் கமண்டலத்தைப் பிடித்த நிலையில் காணப்பட, பின் வலக் கையில் தருப்பைப் புல் கட்டும், பின் இடக் கையில் வேள்விக் கரண்டியும் உள்ளன.

மும்மூர்த்திகள் ஒரே கல்லில் புடைச் சிற்பங்களாக இங்கு உள்ளமை இதன் தனிச் சிறப்பாகும். இத்தகைய அமைப்பு வேறு அமணேசுவரர் கோயில்களில் இல்லாதது மட்டுமன்றி தமிழகத்தில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. மற்றுமொரு சிறப்பு பிரமன் வேள்விக்கு அதிபதி என்பதை உணர்த்த இவனது கைகளில் தருப்பைப் புல்கட்டும் வேள்விக் கரண்டியும் இருப்பது தான்: பொதுவாகப் பிரமனின் கைகளில் காணப் பெறும் அக்கமாலை, ஓலைச்சுவடி ஆகியவை இங்கு அமைக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அமணேசுவரர் கோயில்களில் இங்கு மட்டும் பிரமனின் ஒரு கையில் தருப்பைப் புல்கட்டு உருவாக்கப் பெற்றுள்ளது.

இங்கு தினசரி பூசை நடைபெறுவதாகத் தெரிகிறது.



# 5. தேவம்பாடிவலசு

பொள்ளாச்சியினின்றும் பதின்மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள இந்த ஊர் இராமபட்டினம் ஜமீன் எல்லைக்கு உட்பட்டது. நகரப்பேருந்து வசதி உள்ளது. ஊரினின்றும் கோயில் ஏறத்தாழ ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில் தனியாகக் காட்டு நடுவில் உள்ளது.

கருவறை மற்றும் முன் மண்டபம் ஆகியனற்றை மட்டுமே கொண்ட சிறிய அளவிலானது இந்தக் கோயில். கோயிலுக்கு வெளியே நந்தியும், அதற்குச் சற்றுத் தள்ளி நவக்கிரக சந்நிதியும் உள்ளன.

கருவறையில் நடுவில் சிவபெருமான் பத்மாசனத்தில் உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறான். இவனது நான்கு கைகளில் முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க, பின் வலக் கையில் உடுக்கையும், பின் இடக் கையில் மானும் உள்ளன. இவனது தலையில் கிரீடம் அமைக்கப்பட்டுள்ளது.

சிவபெருமானுக்கு இரு புறமும் இரு தேவியர் காணப்படுகின்றனர். இவர்களது நான்கு கைகளில் முன் வலக் கை அபய முத்திரையிலும், முன் இடக் கை வரத முத்திரையிலும் இருக்க, பின் வலக் கையில் சூலமும், பின் இடக் கையில் அங்குசமும் உள்ளன.

இந்த மூன்று வடிவங்களும் அழகானவையன்று; மேலும் சிவபெருமான் இரு தேவியருடன் இருப்பது எங்கும் இல்லாத அமைப்பு. சிவபெருமான் தலையில் தரித்துள்ள கங்கையை அவனது தேவியென்று திருவருட் செல்வர்கள் கூறியபோதிலும், திருமாலைப் போன்று

சிவபெருமானை இரு தேவியருடன் அமைக்கும் வழக்கம் எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

கருவறையில் உள்ள மூலவர்கள் பிற்காலத்தனவாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. ஏனெனில் வெளியே வேப்ப மரத்தடியில் சிவபெருமானின் மற்றொரு சிலை காணப்படுகிறது. பத்மாசனத்தில் அமர்ந்திருக்கும் இந்த வடிவின் முன் இரு கைகள் யோகமுத்திரையில் இருக்க, பின் வலக் கையில் சக்தியும், பின் இடக் கையில் மானும் உள்ளன; கூளநாயக்கன்பட்டியில் உள்ளதுபோன்று இவனது தலையையும் சடாமகுடம் அலங்கரிக்கிறது. அமணேசுவரர் கோயில்களில் காணப் பெறும் தவக்கோலம் பூண்ட சிவபெருமானின் வடிவங் களில் இதுதான் கலை அழகு மிக்கதாக உள்ளது; மேலும் இந்த வடிவின் பின் வலக் கையில் சக்தி என்ற படைக்கலம் உள்ளது மஞ்சநாயக்கனூரைத் தவிர வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத தனிச்சிறப்பாகும். இந்த வடிவைச் சார்ந்த கலைத்திண்மை மிக்க திருமால் மற்றும் பிரமனின் வடிவங்கள் இருந்து இருக்க வேண்டும். அவை என்னவாயிற்று என்பது தெரிய வில்லை.

மரத்தடியில் மேலும் சண்டிகேசுவரர் மற்றும் தட்சிணாமூர்த்தியின் அழகான வடிவங்கள் காணப்படு கின்றன; சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்கும் தட்சிணாமூர்த்தியின் முன் வலக் கை சின் முத்திரையிலும், முன் இடக் கை பீடத்தின் அடியிலும் இருக்க, பின் இடக் கையில் மான் உள்ளது. பின் வலக் கையில் உள்ளது சரியாகத் தெரியவில்லை. சடாமகுடம் தலையை அலங்கரிக்கும் இவனது காலடியில் முயலகன் அமைக்கப்பட்டுள்ளான். தட்சிணாமூர்த்தி சுகாசனத்தில் அமர்ந்துள்ளது வேறு எங்கும் இல்லாத தனிச் சிறப்பு;

இங்கு பூசை தினசரி நடைபெறுவதாகத் தெரிய வில்லை.

# 6. குரும்பப்பாளையம்

பொள்ளாச்சியிலிருந்து ஏறத்தாழ எட்டுக் கிலோ மீட்டர் தொலைவில் குரும்பபாளையம் என்ற ஊர் உள்ளது. நகரப்பேருந்து வசதி உள்ளது. ஊரை அடுத்து ஓடும் ஆற்றின் கரையில் மேறகு நோக்கி அம்மணீசுவரர் கோயில் அமைந்துள்ளது. இது இராம பட்டினம் ஐமீன் எல்லைக்கு உட்பட்டது.

கருவறை, முன் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது கோயில். மதில் சிதிலமடைந்துள்ளது. கருவறைக்கு முன்னால் நந்தியும், வாயிலின் இரு புறமும் நான்கு கைகளுடன் கூடிய இரு வாயிற்காப்போரும் காணப்படுகின்றனர். பாம்பின்மீது காலை வைத்துள்ள இவர்கள் கதையை ஊன்றியபடி நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளனர். திருச்சுற்றில் நந்தியின் இடப் பக்கம் பிள்ளையார் சந்நிதி, கருவறைக்கு வலப்புறம் சப்த கன்னியர்களுடன் கூடிய அகத்தியர் சந்நிதி, சண்டிகேசுவரர் சந்நிதி, இடப்புறம் தட்சிணாமூர்த்தி சந்நிதி ஆகியவை உள்ளன. ஏனைய அமணேசுவரர் கோயில்களில் பரிவார தெய்வங்களின் சந்நிதி இவ்வளவு கிடையாது. நுழைவாயிலுக்கு வலப்பக்கம் தன் ஊர்தி யுடன் பைரவர் காணப்படுகிறான். கருவறைக்கும் பிள்ளையார் சந்நிதிக்கும் இடையில் எட்டுப் புடைச் ற்பங்களைக் கொண்ட மூன்று கற்பலகைகள் உள்ளன.

சப்த கன்னியர்களுடன் பொதுவாக வீரபத்திரர் மற்றும் பிள்ளையாரை அமைக்கும் மரபுதான் காணப் படுகிறது. சப்த கன்னியர்களுடன் அகத்தியர் எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் முனிவர் என்பதற்கு ஏற்ப தாடி இந்த வடிவிற்கு இல்லை.

படைக்கலங்கள் ஏதுமின்றி இந்த வடிவிற்கு இரு கைகள் மட்டுமே உள்ளதால், வீரபத்திரராகவும் கொள்ள இயலவில்லை. இந்த வடிவம் திட்டமாக இன்னது என்று தெரியவில்லை.

இங்குள்ள படிவங்களில் தட்சிணாமூர்த்தி மற்றும் சண்டிகேசுவரர் வடிவங்கள் நல்ல அழகு உடையனவாகக் காணப்படுகின்றன. கருவறைக்கு இருபுறமும் இரு வாயிற்காப்போரும், சப்த கன்னியர்களுடன் ஒரு வடிவம் உள்ளதும் ஏனைய கோயில்களில் இல்லாது இங்கு மட்டும் காணப்பெறும் வேறுபாடாகும்.

கருவறையில் மூன்று இலிங்கங்கள் ஒரே ஆவுடையாரின்மேல் அமைக்கப்பட்டுள்ளன.

இங்கு பூசை நாடோறும் நடைபெற்று வருகிறது.



## 7. கரப்பாடி

இந்த ஊர் பொள்ளாச்சியினின்றும் ஏறத்தாழப் பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நகரப் பேருந்து வசதி உள்ளது. ஊரினின்றும் அரை கிலோ மீட்டர் தூரத்தில் காட்டுக்குள் தனியாக உள்ள இந்தக் கோயில் ஈசுவரன் கோயில் என்று கிராம மக்களால் அழைக்கப் பெறுகிறது. இது சிறிய அளவிலானது.

கிழக்கு நோக்கியுள்ள இந்தக் கோயில் கருவறை, அர்த்தமண்டபம், முன்மண்டபம் மற்றும் மதில் ஆகியவற்றைக் கொண்டது; முன் மண்டபமும் மதிலும் சிதிலமடைந்துள்ளன; கருவறையின்மேல் சிறிய விமான

அமைப்பு உள்ளது. அர்த்த மண்டபத்தில் பிள்ளையார் மற்றும் ஆவுடையாருடன் கூடிய இலிங்கத் திருவுரு காணப்பட கோயிலுக்கு வெளியே வெட்டுண்டது போன்ற அமைப்பினை உடைய நந்தியும் கொடிக் கம்பமும் உள்ளன.

முன் மண்டபத்தில் இருக்க வேண்டிய நான்கு தூண்களில் மூன்று மட்டுமே உள்ளன. அவற்றில் பிள்ளையார், மயில்மீது முருகன், இசைக்கருவியை இசைக்கும் பெண் ஆகிய வடிவங்கள் அழகுடன் உருவாக்கப்பட்டுள்ளன. முருகன் மற்றும் பிள்ளையார் கைகள் சிதைந்துள்ளன. மேலும் ஒரு உடல் மற்றும் ஐந்து தலைகள் கொண்ட மான் வடிவம் காணப்படு கிறது. பொதுவாக ஒரு தலை நான்கு உடல்களுடன் கூடிய மான்தான் வேறு இடங்களில் உள்ளது. இங்கு ஐந்து தலைகள் உள்ளதை அரிய ஒன்றாகக் கருதலாம். மதிலின் வாயிலை ஒட்டி வடப்புறச் சுவரில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இதே ஊரில் புகழ் பெற்ற தேர்த் திருவிழா நடைபெறும் பத்ர காளியம்மன் கோயிலில் வேலைப்பாடுமிக்க சண்டிகேசுவரர் வடிவம் காணப்படு கிறது. அது இந்தக் கோயிலைச் சார்ந்ததாக இருக்க வேண்டும்.

கருவறையில் ஒரே பீடத்தில் மூன்று இலிங்கங்கள் உள்ளன.

பத்ர காளியம்மன் கோயிலில் கொண்டாடப் பெறும் தேர்த் திருவிழாவின்போது மட்டும் இங்கு பூசை நடைபெறுகிறது. மற்றபடி நாள்தோறும் பூசை நடைபெறுவதாகத் தெரியவில்லை.

---

# 8. சித்தாண்டீசுவரர் கோயில்

பொள்ளாச்சியினின்றும் சிங்கநல்லூர் வழியாகக் கோட்டூர் செல்லும் பாதையில் சித்தாண்டீசுவரர் கோயில் பதினொரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பாலாற்றின் கரையில் மேற்கு நோக்கி இந்தக் கோயிலுக்கு அருகில் ஊர் ஏதும் கிடையாது. சமுத்தூர் ஜமீன் எல்லைக்குட்பட்ட இந்தக் கோயில் சித்தாண்டீசுவரர் கோயில் என்று அழைக்கப் பெறுகிறது. சித்தன் மற்றும் ஆண்டி என்ற பெயர்கள் சிவபெருமானது தவக் கோலத்தை உணர்த்துவனவாக உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

கோயில் கருவறை, முன் மண்டபம், திறந்த வெளி மண்டபம், திருமதில் ஆகியவற்றைக் கொண்டது. முன் மண்டபத்தில் பிள்ளையாரும், கருவறையில் பிள்ளையாருடன் நாகங்களும் காணப்படுகின்றன. திறந்தவெளி மண்டபத்தில் சப்த கன்னியர், ஒரு தலை கொண்ட நாகங்கள் மூன்று, ஐந்து தலை கொண்ட நாகம் ஒன்று, பலிபீடம், மற்றும் நடன விநாயகர், முருகன், குலதேவருடன் கூடிய கொடி மரம் ஆகியவை உள்ளன.

திறந்த மண்டபத்திற்குத் தென்புறமாக உள்ள சந்நிதியில் ஜமீன்தார் தோற்றமுடையவரின் சிலை காணப்படுகிறது. இது பொன்னாக் கவுண்டர் சிலை என்று சொல்லப்படுகிறது. மதிலையொட்டி மேல் புறமாக இரண்டு பெண்கள் மற்றும் மூன்று ஆண்களைப் புடைச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்ட நான்கு கற்பலகைகள் உள்ளன.

கருவறைக்கு வடபுறமாக வரிசையாக எட்டுத் தூண்கள் காணப்படுகின்றன. இவை ஏற்கனவே

இருந்த கோயிலில் இருந்த தூண்களாக இருக்கலாம். இவற்றில் தண்டாயுதபாணி, இரு வாயிற்காப்போர், அன்னை சிவகாமி, மணிவாசகப் பெருந்தகையுடன் நடராசர், சிவபெருமான், மற்றும் அனுமான், அடியார் ஒருவர், வள்ளி தெய்வயானையுடன் முருகப் பெருமான், திருமகள் மற்றும் பூமகளுடன் திருமால் மற்றும் யோக நரசிம்மர் ஆகியோர் உருவாக்கப்பட்டுள்ளனர். கருப்பண்ண சாமியின் வடிவமும் காணப்படுகிறது.

தற்போது உள்ளது சமீப காலத்தில் கட்டப் பெற்ற கல்லான கோயில். வெளிப் படிக்கட்டில் கல்வெட்டு அழிந்த நிலையில் காணப்படுகிறது.

கருவறையில் ஒரே பீடத்தில் மூன்று இலிங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இங்கு தினசரி பூசை நடைபெற்று வருகிறது.

---

## 9. தேவனாம்பாளையம்

இது பொள்ளாச்சியினின்றும் பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவில் கப்பளாங்கரை என்ற ஊரை அடுத்துள்ளது. நகரப்பேருந்து வசதி உள்ளது. இங்குள்ள அம்மணீசுவரர் கோயில் ஊரினின்றும் அரை கிலோ மீட்டர் தூரத்தில் ஆற்றின் நடுவில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. கோயிலுக்கு வடபுறமாக சண்டிகேசுவரர் சந்நிதியும், தென்புறமாக தட்சிணா மூர்த்தி சந்நிதியும் சமீப காலத்தில் கட்டப் பெற்றுள்ளன.

கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது இந்தக் கோயில். கருவறைக்கு மேல் நாற்புறமும் நந்திகளுடன் கூடிய விமானம் உள்ளது. வெட்டுப்பட்ட நந்தி, கொடி மரம், அதை அடுத்து இரு நாகங்களுடன் கூடிய இலிங்கம், மூன்று நந்திகள், சப்த கன்னியர் உட்படப் பத்துப் பெண்களின் சிலைகள் ஆகியவை கோயிலுக்கு முன்னால் திறந்த வெளியில் காணப்படுகின்றன.

அர்த்த மண்டபத்தில் உள்ள தூண்களில் எட்டுக் கைகளுடன் கூடிய ஊர்த்துவதாண்டவர், எட்டுக் கைகள் உடைய பத்ரகாளி, கோயிலைக் கட்டியதாகக் கருதப்படும் இருவர் ஆகியோரின் பெரிய அளவிலான சிலைகள் உருவாக்கப்பட்டுள்ளன. நடராசர் மற்றும் பத்ரகாளியின் சிலைகள் கலை அழகுடன் விளங்குகின்றன. இத்தகைய பெரிய அளவிலான கலைத் திண்மை மிக்க சிற்பங்கள் வேறு எந்த அமணேசுவரர் கோயிலிலும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மகாமண்டபத்தில் வலப்புறம் பிள்ளையாரும், இடப்புறம் முருகனும் இருக்க, வாயிலுக்கு வலப்புறம் அன்னை அகிலாண்டேசுவரியின் திருவுருவம் காணப்படுகிறது. இது சமீப காலத்தில் எழுந்தருளுவிக்கப் பெற்றது. பொதுவாக எங்கும் உள்ளது போன்று, இங்கும் கொடி மரத்தில் பிள்ளையார், முருகன், குலதேவர் மற்றும் இலிங்கத்தின் மீது பால் சுரக்கும் பசு ஆகியவை அமைக்கப் பெற்றுள்ளன.

கருவறையின் உள்ளே மூன்று இலிங்கங்கள் தனித் தனியாகக் காணப்படுகின்றன. நடுவில் உள்ளது சிவபெருமானது இலிங்கத்திற்கு மட்டும் ஆவுடையார் உள்ளது; வலப்புறம் உள்ளது பிரமலிங்கம் என்றும்,

இடப்புறம் உள்ளது விஷ்ணு லிங்கம் என்று சொல்லப் படுகிறது.

இங்கு நாடோறும் பூசை நடைபெறுகிறது.

---

## 10. ஜலத்தூர்

இராமபட்டினம் ஜமீனுக்கு உட்பட்ட இந்த ஊர் பொள்ளாச்சியினின்றும் பதினொரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நகரப் பேருந்து வசதி உள்ளது. ஊருக்குச் சற்றுத் தள்ளித் தாளக்கரை ஆற்றின் கரையில் அமைந்துள்ள கோயிலை இங்குள்ள மக்கள் அய்யன் கோயில் என்று அழைக்கின்றனர்.

வடக்கு நோக்கிக் கட்டப்பெற்ற இந்தக் கோயில் கருவறை, முன்மண்டபம், மதில் ஆகியவற்றைக் கொண்டது. திருச்சுற்றில் நந்தி இருக்க, கோயிலின் வாயிலையொட்டி மக்கள் உட்கார வசதியாக இரு புறமும் திண்ணைகள் கட்டப் பெற்றுள்ளன. வெளியே கொடி மரம் காணப்படுகிறது. கருவறையின் நுழை வாயிலுக்கு வெளிப்புறம் குரும்பபாளையம் போன்று ஊர்தியுடன் பைரவரை அமைத்துள்ளனர்.

கருவறையில் மூன்று இலிங்கங்கள் ஒரே பீடத்தில் காணப்படுகின்றன.

இங்கு பூசை நடைபெற்று வருகிறது.

---

# 11. தெ. கோட்டாம்பட்டி

பொள்ளாச்சி நகரின் ஒரு பகுதியாகிய இங்கு வடக்கு நோக்கிக் கோயில் கட்டப்பட்டுள்ளது.

இந்தக் கோயிலில் இறைவனுக்கும் இறைவிக்கும் தனித்தனிக் கருவறை, அதற்குமேல் விமானம், அர்த்த மண்டபம் ஆகியவை உள்ளன. இரு கருவறைகளுக்கும் பொதுவாக மகாமண்டபம், மதில் ஆகியவை கட்டப் பெற்றுள்ளன. மகாமண்டபத்தில் பிள்ளையார், நந்தி ஆகியோர் காணப்படுகின்றனர்.

இது அம்மணீசுவரர் கோயில் என்று அழைக்கப்பட்ட போதிலும் இங்கு எல்லாச் சிவாலயங்களைப் போன்று ஒரே ஒரு இலிங்கம்தான் மூலவராகக் காணப்படுகிறது.

அமணலிங்கேசுவரர் கோயில்களில் எல்லாம் சிவ பெருமான் தவக்கோலத்தில் எழுந்தருளப் பெறுவதால், இறைவியை அமைக்கும் மரபு இல்லை. ஆனால் இங்கு 1974இல் நடைபெற்ற திருக்குடமுழுக்கு விழாவின் போது அன்னைக்கு என்று ஒரு சந்நிதி ஏற்படுத்தி, இறைவியை எழுந்தருளுவித்துள்ளார்கள். இவளது திருப்பெயர் அருள் நாயகி என்பது. அன்னையைத் தனியாக அமைத்தால் நான்கு கைகளுடனும், இறைவனுடன் எழுந்தருளிவித்தால் இரண்டு கைகளுடனும் இருக்க வேண்டும் என்பது ஆகமவிதி. ஆனால் இங்கு இங்கு இறைவியைத் தனியாக அமைத்து இருந்த போதிலும், இவளுக்கு இரு கைகள்தாம் உருவாக்கப் பெற்றுள்ளன. இவளது வலக் கையில் தாமரையும், இடக் கை கத்ய வலம்பித முத்திரையிலும் உள்ளன. இவளது சந்நிதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது.

இங்கு பூசை நாடோறும் நடைபெற்று வருகிறது.

# 12. கருப்பம்பாளையம்

பொள்ளாச்சியினின்றும் பதின்மூன்று கிலோ மீட்டர் தொலைவில் கரும்பம்பாளையம் உள்ளது. நகரப் பேருந்து வசதி உள்ளது. இங்கிருந்து வக்கம்பாளையம் செல்லும் வழியில் ஏறத்தாழ முக்கால் கிலோ மீட்டர் தூரத்தில் காட்டுக்குள் தனியாக இந்தக் கோயில் உள்ளது. இது மிகச் சிறிய அளவிலானது.

வடக்கு நோக்கிக் கட்டப்பெற்றுள்ள இந்தக் கோயில் கருவறையை மட்டுமே கொண்டது. கருவறைக்கு மேலே சிறிய விமானம் காணப்பட, நாற்புறமும் நந்திகள் அமைக்கப்பட்டுள்ளன. கருவறைக்கு முன்னர் நந்தி உள்ளது.

கருவறையில் ஒரே ஒரு இலிங்கம்தான் உள்ளது. இருப்பினும் அது அமணேசுவரர் கோயில் என்றே அழைக்கப் பெறுகிறது.

இங்கு பூசை எதுவும் நடைபெறுவதாகத் தெரிய வில்லை.

— —

## 13. பணிக்கம்பட்டி

பொள்ளாச்சியினின்றும் குரும்பபாளையம் செல்லும் வழியில் ஆறு கிலோ மீட்டர் தொலைவில் பணிக்கம் பட்டி என்ற ஊர் உள்ளது.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள இந்தக் கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மற்றும் மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. அர்த்த மண்டபத்தின் நடுவில் நந்தியும், வாயிலையொட்டிப் பிள்ளையாரும், கருவறைக்கு மேலே நாற்புறமும் நந்திகளுடன் கூடிய விமானமும் காணப்படுகின்றன. கோயிலுக்கு முன்னால் பலிபீடமும், மண்ணாலான பெரிய குதிரை வாகனமும் உள்ளன. பொதுவாக அய்யனார் கோயில்களுக்கு முன்பு தான் இத்தகைய பெரிய அளவிலான குதிரைகளை அமைப்பது மரபு. சிவபெருமான் கோயிலுக்கு முன்னால் குதிரை அமைந்துள்ளது எங்கும் இல்லாத ஒன்று.

கருவறையின் உள்ளே ஆவுடையார் போன்ற ஒரு அமைப்பு காணப்படுகிறது. ஆவுடையார் என்றும் சொல்வதற்கில்லை. இலிங்கத்தின் மேல் பாகமான பாணமும் இல்லை. இது நாடோறும் வளர்ந்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

கோயிலுக்குத் தென்புறமாகத் தனியாகச் சப்த கன்னியர் சந்நிதி உள்ளது.

இது அம்மணீசுவரர் கோயில் என்றே அழைக்கப் பெறுகிறது.

இங்கு நாடோறும் பூசை நடைபெற்று வருகிறது.

---

## 14. பெரியபட்டி

உடுமலைப்பேட்டை வட்டத்தைச் சார்ந்த இந்த ஊரைச் சார்ந்த சுப்பிரமணிய சுவாமி கோயில் நெகமத்தினின்றும் பூளவாடி செல்லும் பாதையில் தனியாக உள்ளது. ஊர் ஏதும் பக்கத்தில் இல்லை. கிழக்கு நோக்கிக் கட்டப்பெற்ற இந்தக் கோயிலினின்றும் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் பெரியபட்டி உள்ளது; மூலவரைச் சுப்ரமணியராகக் கொண்ட இந்தக் கோயில் மக்களால் சுப்பராயன் கோயில் என அழைக்கப் பெறுகிறது. பாலாற்றின் கரையில் உள்ள இந்தக் கோயிலுக்குச் சற்று தள்ளி உப்பாறு என்ற ஆறு ஓடுகிறது.

கருவறை, அர்த்த மண்டபம், பெரிய இடம் கொண்ட மதில் ஆகியவற்றைக் கொண்டது கோயில். கருவறைக்கு முன்னால் மயில் மண்டபம் காணப்படுகிறது. கோயிலுக்குத் தென்புறம் நவக்கிரக சந்நிதி சமீப காலத்தில் கட்டப்பட்டுள்ளது. இதையொட்டி இலிங்கம் மற்றும் தண்டாயுதபாணி ஆகியோருடன் கூடிய ஐந்து தலைகள் கொண்ட பாம்பு இரண்டும், இதற்குப் பின்னால் தனியாக இரு இலிங்கங்களும் காணப்படுகின்றன. மூலவருக்குப் பின்னால் இருந்ததாகக் கூறப்படும் மும்மூர்த்திகளின் சிலைகள் தற்போது நவக்கிரக சந்நிதியில் வைக்கப்பட்டுள்ளன.

நடுவில் காணப்படும் சிவபெருமான் பத்மாசனத்தில் அமர்ந்துள்ளான். அவனது முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க, பின் வலக் கையில் மழுவும், பின் இடக் கையில் மானும் காணப்படுகின்றன. இவனது தலையைச் சடா மகுடம் அலங்கரிக்கிறது. இவனுக்கு முன்னால் இவனது ஊர்தியான நந்தி உள்ளது.

சிவபெருமானுக்கு இடப்புறமாகத் திருமால் நின்ற நிலையில் காணப்படுகிறான். இவனது பின் வலக் கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் காணப்பட, முன் வலக் கை வரத முத்திரையிலும், முன் இடக் கை ஊரு முத்திரையிலும் உள்ளன. ஏனைய இடங்களில் முன் வலக் கை அபய முத்திரையில் இருக்க, இங்கு மட்டும் வரத முத்திரையில் அமைந்துள்ளது. பொதுவாக வலக் கையை அபய முத்திரையிலும், இடக் கையை வரத முத்திரையிலும் உருவாக்குதல் மரபு. இங்கு அந்த மரபு பின்பற்றப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவனது தலையை மகுடம் அணி செய்கிறது.

சிவபெருமானுக்கு வலப்புறமாகப் பிரமன் நின்ற நிலையில் காணப்படுகிறான். மஞ்ச நாயக்கனூரைப் போன்று, இங்கு இவனுக்கு நான்கு தலைகள் அமைக்கப் பட்டுள்ளன. தலைகள்மீது மகுடங்கள் காணப்படு கின்றன. பின் வலக் கையில் அக்க மாலையும், பின் இடக் கையில் கமண்டலமும் அமைந்து இருக்க, முன் இடக் கையில் ஓலைச் சுவடியும், முன் வலக் கை சின் முத்திரையிலும் உள்ளன. முன் வலக் கை சின் முத்திரை யில் உள்ளது இங்கு மட்டும் காணப்படும் தனிச் சிறப்பாகும்.

மும்மூர்த்திகளின் சிலைகள் மிகவும் பொடிந்து போன நிலையில் உள்ளன.

மும்மூர்த்தி வடிவங்கள் மூலவருக்குப் பின்னால் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. மேலும் ஓலைச் சுவடியில் இது "மூவர் கோட்டம்" எனக் குறிப்பிடப் பட்டுள்ளதாகத் தெரிகிறது. கோட்டம் என்றால் கோயில் என்பது பொருள்.

"அமரர் தருக்கோட்டம் வெள்ளானைக் கோட்டம்
புகர் வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல் வாயில்
உச்சிக் கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம்
வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம் பணையான் வாழ்
கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக் கோட்டம்"
(களாத்திற முரைத்த காதை வரிகள் 9-13)

என்பது சிலப்பதிகாரம். மூவர் என்றால் மும்மூர்த்திகளைக் குறிப்பதாகக் கோள்ளலாம். ஒரு சிவ தலங்களில் முன்னாளில் சிவன் கோயில்களாக இருந்தவை தற்காலத்தில் சுப்ரமணிய சுவாமி கோயில்கள் என அழைக்கப் பெறுகின்றன. பொள்ளாச்சியில் உள்ள சுப்ரமணியசுவாமி கோயிலை உதாரணமாகக் கூறலாம். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டால், ஒரு காலத்தில் மும்மூர்த்திகள் கோயிலாக அதாவது அமணேசுவரர் கோயிலாக இருந்த இந்தக் கோயில் சுப்ரமணிய சுவாமி கோயிலாக மாறி விட்டது போலும்.

பட்டி முனிவருக்கு இங்கு முருகன் காட்சி அளித்தமையால், இந்த ஊர் பெரியபட்டி எனப் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது.

இங்கு நாடோறும் பூசை நடை பெறுகிறது.

# 6. பொது

முதல் மூன்று இடங்களில், மும்மூர்த்திகளின் திருவுருவங்கள் தனித்தனியாக ஒரே பீடத்திலும், பெரியபட்டி முருகன் கோயிலில் இம் மூவர் வடிவங்கள் தனித்தனியாகவும், கூளநாயக்கன்பட்டியில் மூன்று வடிவங்களும் ஒரே கல்லில் புடைச் சிற்பங்களாகவும் உள்ளன. தேவம்பாடிவலசில் நடுவில் சிவபெருமான் இருக்க, இருபுறமும் அன்னையர்கள் காணப்படு கின்றனர். இவை பிற்காலத்தனவாகத் தெரிகின்றன.

ஆறாவது முதல் பத்தாவது இடங்களில் மூன்று இலிங்கங்கள் அமைக்கப்பட்டு அவை மும்மூர்த்திகளாக வணங்கப்படுகின்றன. தேவனாம்பாளையம் நீங்கலாக ஏனைய இடங்களில் மூன்று இலிங்கங்களும் ஒரே பீடத்தில் இருக்க, தேவனாம்பாளையத்தில் மட்டும் நடுவில் உள்ள இலிங்கம் ஆவுடையாருடன் அமைக்கப் பட்டு, இதன் இரு புறமும் இரு இலிங்கங்கள் உள்ளன. இலிங்கத்தில் மூன்று பாகங்கள் உண்டு என ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது. கீழே உள்ள சதுரமான பகுதி பிரம பாகம் என்றும், நடுவில் உள்ள எட்டுப்பட்டை கொண்ட பகுதி திருமால் பாகம் என்றும், மேலே உள்ள நீண்ட வட்டப்பகுதி சிவபெருமானது பாகம் என்றும் கூறப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில்தான் இங்கு மும்மூர்த்திகளுக்கு மூன்று இலிங்கங்கள் அமைத்தனர் போலும்.

தெ: கோட்டாம்பட்டி மற்றும் கருப்பம்பாளையம் ஆகிய இடங்களில் கருவறையில் ஒரே இலிங்கம்தான் உள்ளது. பணிக்கம்பட்டியில் பாணம் இன்றி, ஆவுடையார் அமைப்பில் இயற்கையான பாறை காணப்

படுகிறது; இருப்பினும் இந்த இடங்களில் உள்ள கோயில்கள் எல்லாம் அமணீசவரர் கோயில்கள் என்றே அழைக்கப்பட்டு வருகின்றன.

ஜலத்தூரில் மட்டும் இந்தக் கோயில் அய்யன் கோயில் என்று சொல்லப்படுகிறது. பெரியபட்டியில் மட்டும் முருகன் மூலவராக உள்ளான்.

சிவபெருமான் தவக்கோலத்தில் இருப்பதால், இறைவியின் சந்நிதி தனியாக இல்லை. தெ. கோட்டாம் பட்டி மற்றும் தேவனாம்பாளையம் ஆகிய இடங்களில் சமீப காலத்தில் நடைபெற்ற திருக்குடமுழக்கின்போது சக்தியின் வடிவம், மற்றும், சந்நிதி தனியாக வைக்கப் பட்டுள்ளன.

திருமூர்த்தி மலையில் உள்ளது போன்று, மஞ்ச நாயக்கனூர், குரும்பபாளையம், சித்தாண்டீசுவரர் கோயில், பணிக்கம்பட்டி மற்றும் தேவனாம்பாளையம் ஆகிய இடங்களில் சப்த கன்னியர் திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

முதல் நான்கு இடங்களிலும், பெரியபட்டி முருகன் கோயிலிலும் சிவபெருமான் நடுவில் இருக்க, இருபுறமும் திருமாலும் பிரமனும் நின்ற நிலையில் அமைக்கப் பட்டுள்ளனர் ஊத்துக்குளி மற்றும் பெரியபட்டியில் மட்டும் சிவபெருமானுக்கு வலப்புறமாகப் பிரமனும், இடப்புறமாகத் திருமாலும் இருக்க, ஏனைய மூன்று இடங்களில் திருமால் சிவபெருமானுக்கு வலப்புறமும், பிரமன் இடப்புறமும் உள்ளனர். மேலும் திருமால் மற்றும் பிரமன் ஆகிய இருவரின்முன் இரு கைகள், இலிங்கோற்பவர் வடிவில் உள்ளது போன்று கூப்பிய நிலையில் இல்லாது, அபய முத்திரை போன்றவற்றில் காணப்படுவதால், மும்மூர்த்திகளில் ஒருவருக்கொருவர்

ஏற்றத்தாழ்வு காண்பிக்கப்படவில்லை என்பது புலனாகிறது.

கஞ்சம்பட்டி நீங்கலாக ஏனைய நான்கு இடங்களில் சிவபெருமானது முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க, கஞ்சம்பட்டியில் மட்டும் அபய மற்றும் வரத முத்திரைகளில் காணப்படுகின்றன. சிவபெருமானது இருபத்தைந்து மகேச வடிவங்களுக்கோ அல்லது வேறு எந்த வடிவிற்கோ ஆகமங்கள் முன் இரு கைகள் யோக முத்திரையில் இருக்க வேண்டும் என விதிக்க வில்லை. யோக தட்சணாமூர்த்தி வடிவிற்கு மட்டும் ஒரு கைதான் மடிமீது இருக்க வேண்டும் என சொல்லப் பட்டுள்ளதே தவிர, இரு கைகளும் மடிமீது இருக்க வேண்டும் எனக் கூறப்படவில்லை. எனவே இது திருமூர்த்தி மலையில் உள்ள வடிவை யொட்டி அமைக்கப் பட்டது என்பதை உறுதி செய்கிறது. பின் இரு கைகளில் சூலம், சக்தி, மழு, மான், உடுக்கை ஆகியவை காணப்படுகின்றன. தேவம்பாடிவலசு மற்றும் மஞ்ச நாயக்கனூரில் மட்டும் பின் வலக் கையில் சக்தி காணப்பட, தேவம்பாடிவலசில் மட்டும் பின் வலக் கையில் உடுக்கை அமைந்துள்ளது.

திருமாலைப் பொறுத்த வரையில், பின் இரு கை களில் சங்கு, சக்கரம் இருக்க, முன் இரு கைகள் அபய, வரத அல்லது ஊரு முத்திரைகளில் உள்ளன. பெரிய பட்டியில் மட்டும் இவனது முன் வலக்கை வரத முத்திரையில் உள்ளது.

மஞ்சநாயக்கனூர் மற்றும் பெரியபட்டியில் மட்டும் பிரமாவிற்கு நான்கு தலைகள் இருக்க, ஏனைய மூன்று இடங்களில் ஒரே ஒரு தலைதான் அமைக்கப்பட்டுள்ளது. இவனது கைகளில் வைத்துள்ளவை இடத்திற்கு இடம்

வேறுபட்டுக் காணப்படுகின்றன. அபய முத்திரையுடன் இவனது கைகளில் அக்க மாலை, கமண்டலம், ஓலைச் சுவடி, வேள்விக்கரண்டி, தருப்பைப் புல் கட்டு, யோக தண்டம் உருவாக்கப்பெற்ற தடி ஆகியவை உருவாக்கப் பெற்றுள்ளன. பெரியபட்டியில் மட்டும் இவனது முன் வலக்கை சின் முத்திரையில் உள்ளது.

மும்மூர்த்திகளை ஒரே பீடத்தில் ஒரு சேர மூலவர் களாக வைத்து வணங்குவது தமிழகத்தில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

---

# பிற்சேர்க்கை—1

1. சமணமும் தமிழும் by திரு மயிலை சீனி வேங்கடசாமி, பக்கங்கள் 76, 145.
2. சமணமும் தமிழும் by திரு மயிலை சீனி வேங்கடசாமி, பக்கம் 128.
3. சமணமும் தமிழும் by திரு மயிலை சீனி வேங்கடசாமி, பக்கம் 166.
4. சூடாமணி நிகண்டு, பக்கம் 1.
5. ,, பக்கம் 7.
6. திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் - திருப்பனந்தாள் வெளியீடு, பக்கம் 232.
7. திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் - திருப்பனந்தாள் வெளியீடு, பக்கம் 89.
8. திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் - திருப்பனந்தாள் வெளியீடு, பக்கம் 241.
9. திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் - திருப்பனந்தாள் வெளியீடு, பக்கம் 88.
10. சமணமும் தமிழும், பக்கம் 101.
11. ,, பக்கம் 103.
12. ,, பக்கம் 133.
13. ,, பக்கம் 138.
14. ,, பக்கம் 128.
15. ,, பக்கம் 143.
16. ,, பக்கம் 168.



17. கொங்கு நாட்டு வரலாறு by கோவைக்கிழார் கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார் பக்கம் 98.

18. சமணமும் தமிழும், பக்கம் 168.

19. திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம், பக்.

20. ,, ,, பக்கம் 25.

21. ,, ,, பக்கம் 21.

# பிற்சேர்க்கை—2

## ஆசனம், முத்திரை ஆகியவற்றின் விளக்கங்கள்

### ஆசனம்

**பத்மாசனம்:** இரு கால்களும் இருக்கைமீது ஒன்றின் மீது ஒன்று மடித்து இருத்தல்; ஒன்றின் உள்ளங்கால் மற்றொன்றின் தொடை மீது இருக்க வேண்டும்.

**சுகாசனம்:** ஒருகால் பொதுவாக இடக்கால் இருக்கையில் படுக்கையாக இருக்க, மற்றொரு கால் தொங்கிய நிலையில் இருத்தல்.

### முத்திரை

**யோக முத்திரை:** இரு கைகள் ஒன்றின்மேல் ஒன்றாக மடிமீது இருத்தல்.

**அபய முத்திரை:** விரல்கள் மேல் நோக்கிய நிலையில் உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, தன்னை அடைக்கலம் அடைந்தோரை "அஞ்சேல்" என்று கூறுமாப் போன்று இருத்தல்.

**ஊரு முத்திரை:** ஊரு என்றால் தொடை; கை தொடைமீது ஊன்றிய நிலை.

**வரத முத்திரை:** இடக் கை உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, விரல்கள் தானினைச் சுட்டிக்காட்ட,

